[1st November 1958

*Import of hides and skins*

* 790-B *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1951-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரை நமது ராஜ்யத்திற்கு வெளிநாடுகளிலிருந்தும் வெளி ராஜ்யங்களிலிருந்தும் எவ்வளவு மதிப்புள்ள பதனிடாத என்னென்ன தோல்கள் இறக்குமதி செய்யப்பட்டன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : A statement [a] is placed on the table of the House.

Sri V. K. KOTHANDARAMAN : Raw skins and hides-களை வெளி தேசங்களில் இருந்து இறக்குமதி செய்து கொண்டிருந்ததை விட இப்பொழுது அதிகப்படியான இறக்குமதி செய்யப்படுகிறது என்று புள்ளி விவரங்கள் கூறுகிறது. அதேபோன்று நமது தேசத்தில் மற்ற ராஜ்யங்களிலிருந்து 1953–54-ம் ஆண்டில் $2\frac{1}{2}$ கோடியாகயிருந்து $1\frac{1}{2}$ லட்சமாக இறக்குமதி செய்யக்கூடிய அளவிற்கு குறைந்திருக்கிறது. ஆகவே வெளி தேசங்களில் இருந்து இறக்குமதி செய்வதைத் தடுத்து நம் தேசத்தில் உள்ள மற்ற ராஜ்யங்களிலிருந்து அவைகளை வரவழைக்க உடனடியாக ஏற்பாடு செய்யப்படுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் குறிப்பிட்டதை வரவேற்கிறேன். இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியை அதிகப்படுத்தும் விஷயத்தில் கவனம் செலுத்தப்பட்டுத்தான் வருகிறது.

*Assignment of lands in North Arcot district*

* 790-C *Q.*—Sri S. M. ANNAMALAI : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் தாலூக்கா, கிராமவாரியாக எத்தனை ஏக்கர்—

(1) தீர்வை ஏற்படாத புஞ்சை.

(2) அனாதீனம்.

(3) பஞ்சம தரிசு.

(4) ஆட்சேபணையில்லாத புறம்போக்கு நிலம் உள்ளன ?

(ஆ) இவைகளைப் பட்டா செய்யவேண்டுமென்று எத்தனை மனுக்கள் 1957-ல் வந்தன?

(இ) அவைகளின் நிலை என்ன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) to (*c*) The Government consider that no useful purpose will be served by furnishing the particulars desired.

Sri S. M. ANNAMALAI : இந்த பஞ்சம தரிசு நிலங்கள் அதிகமாக இருக்கிறது. அவைகளை ஜாரி செய்து, பட்டா செய்து கொடுக்கவேண்டுமென்றால் அதிக காலதாமதமாகிறது. ஆகவே, ஒவ்வொரு தாலுகாவிற்கும் ஒரு டெப்டி தாசில்தார் வீதம் நியமித்து ஜாரி செய்து கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : அதை, சர்க்கார் ஏற்கெனவே செய்திருக்கிறது. முன்பே, செங்கம் தாலூக்கா, திருவண்ணுமலை தாலூகாக்களில் ஸ்பெஷல் சிப்பந்திகள் நியமிக்கப்பட்டு, இப்பொழுது போளூர், அரக்கோணம், வேலூர் போன்றவிடங்களில் இவைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

---

a Printed as Appendix VI on pages 375–377 infra.